தண்டபாணி சுவாமிகள் அருளிய

# பதிக வருடம்

(மூன்றாம் பகுதி)

பதிப்பு
க. விநாயகமூர்த்தி

தமிழ் இலக்கியத்துறை
சென்னைப் பல்கலைக் கழகம்
சென்னை - 600 005
2008

தண்டபாணி சுவாமிகள் அருளிய

# பதிக வருடம்

(மூன்றாம் பகுதி)

சுவடியியலும் பதிப்பியலும்
பட்டயப் பேற்றிற்காகச்
சென்னைப் பல்கலைக்கழகத்திற்கு
அளிக்கப்பெறும் பதிப்பேடு

பதிப்பு
க. விநாயகமூர்த்தி

நெறியாளர்
முனைவர் ய. மணிகண்டன்
முதுநிலை விரிவுரையாளர்

## தமிழ் இலக்கியத்துறை

சென்னைப் பல்கலைக் கழகம்
சென்னை - 600 005
2008

சுவடியியலும் பதிப்பியலும்
பட்டயப் பேற்றிற்காகச்
சென்னைப் பல்கலைக்கழகத்திற்கு
அளிக்கப்பெறும் பதிப்பேடு
எண்: 53010734

# நெறியாளர் சான்றிதழ்

**முனைவர் ய. மணிகண்டன்**
முதுநிலை விரிவுரையாளர்
தமிழ் இலக்கியத் துறை
சென்னைப் பல்கலைக்கழகம்
சென்னை - 600 005

'பதிக வருடம்' எனும் தலைப்பிலான நூலின் மூலச்சுவடியின் பதிகம் 31 முதல் 40 வரையிலான பத்துப் பதிகங்களைச் **'சுவடியியலும் பதிப்பியலும்'** எனும் பட்டயம் பெறுவதற்காகக் க. விநாயகமூர்த்தி அவர்கள் என் மேற்பார்வையில் பதிப்புச் செய்தார் என்றும் இப்பதிப்பு இவர்தம் தனி முயற்சியில் உருவானது என்றும் சான்றளிக்கிறேன்.

நெறியாளர்,
(ய. மணிகண்டன்)

நாள் :
இடம் : சென்னை - 5

# பதிப்பாளர் உறுதிமொழி

**க. விநாயகமூர்த்தி**
ஆய்வாளர்
சுவடியியல் மற்றும் பதிப்பியல்
தமிழ் இலக்கியத்துறை
சென்னைப் பல்கலைக்கழகம்
சென்னை - 600 005

**'சுவடியியலும் பதிப்பியலும்' என்னும் பட்டயப் பேற்றிற்காகச் சென்னைப் பல்கலைக்கழகத்திற்கு அளிக்கப்பெறும் 'பதிக வருடம்' எனும் தலைப்பிலான இப்பதிப்பேடு என் தனி முயற்சியில் உருவானது என்று உறுதியளிக்கிறேன்**

பதிப்பாளர்,

(க. விநாயகமூர்த்தி)

நாள் :

இடம் : சென்னை - 5

# உள்ளடக்கம்

# பதிப்புரை

பல்வேறு ஓலைச் சுவடிகளைக் கண்டுபிடித்து தமிழ் இலக்கியத்தின் சிறப்பினை உலகிற்கு வெளிப்படுத்திய பெருமை தமிழ்ச்சுவடியியல் அறிஞர்களையே சாரும். ஓலைச்சுவடி களைப் பெரும்பாலும் மடங்கள், கோயில்கள், பழமையான நூலகங்களில் வைத்துத்தான் பாதுகாத்து வந்தனர் என்பது கவனிக்கத் தக்கது. ஓலைச்சுவடியின் எழுத்துகளும் காலத்திற்கு ஏற்றவாறு மாறுபட்டு வந்திருப்பதைச் சுவடிகளின் மூலம் அறியலாம். தமிழ்ச் சுவடிகள் பெரும்பாலும் இலக்கணம், இலக்கியம், தத்துவம், கலை, மருத்துவம், சோதிடம் ஆகிய பொருள்களிலேயே காணப்படு கின்றன.

தமிழ் ஓலைச் சுவடிகளைத் தேடிக் கண்டு பிடித்து பதிப்பித்த புலவர் பெருமக்களுள் சி. வை. தாமோதரம் பிள்ளை, உ.வே. சாமிநாதய்யர், ஆறுமுக நாவலர், எஸ். வையாபுரிப் பிள்ளை ஆகியோர் குறிப்பிடத்தக்கவர்கள். இவர்கள் அனைவரும் பல சிறந்த இலக்கியங்களையும் இலக்கண நூல்களையும் பதிப்பித்துத் தமிழிற்குப் பெரும் தொண்டு செய்துள்ளனர்.

சுவடிகளைப் பாதுகாக்க அந்தந்த காலகட்டத்தில் அரசு சார்ந்த நிறுவனங்களும், அரசு சாராத நிறுவனங்களும் பல வழிகளிலும் செயல்பட்டு வந்தன. இந்த வகையில் சென்னை அரசினர் கீழ்த்திசை சுவடியியல் நூலகமும், தஞ்சைச் சரசுவதிமகால் நூலகமும், சென்னை உலகத் தமிழாராய்ச்சி நிறுவனமும், உ.வே. சாமிநாதையர் நூலகமும் குறிப்பிடத்

தக்கவை. இந்நூலகங்கள் ஏராளமான ஓலை மற்றும் தாள்சுவடிகளை இன்றளவும் பாதுகாத்து வருகின்றன. மேலும் அவற்றிலிருந்து பல அரிய நூல்களைப் பதிப்பித்து வெளியிட்டு வருகின்றன.

# ஆசிரியர் வரலாறு

தவத்திரு வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் 19ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த சிறந்த தமிழ்ப் புலவர்களுள் ஒருவர். தவச்சிறப்பிலும் உபாசனையிலும் உயர்ந்தவர். தமிழ்ப்பாக்கள் இயற்றும் ஆற்றலை எட்டாவது வயதிலேயே கைவரப்பெற்றவர். இவர் செந்தமிழ்ப் பாண்டி நாட்டில் திருநெல்வேலியில் சைவ வேளாளர் மரபில் 28.11.1839இல் செந்தினாயகம்பிள்ளை - பேச்சி முத்தம்மாள் என்ற தம்பதியருக்குப் பிறந்தவர்.

சந்தப் பாடல் முதல் எந்தப் பாடலானாலும் ஒரே தடவையில் பாடி ஓலைச்சுவடியில் எழுதுவது இவரது வழக்கமாகும். இங்ஙனம் இவர் இயற்றியவை சுமார் ஒரு லட்சம் செய்யுள்கள் ஆகும். முருகன் மீது எழுந்த ஊடல் காரணமாக இவரே நீரிலும் நெருப்பிலும் இட்டு அழித்தவை போக எஞ்சியுள்ளவை சுமார் ஐம்பதினாயிரம் பாடல்களே.

வண்ணம் என்பது அகப்பொருள் துறையில் சந்தக்குழிப்புடன் இயற்றப்படும் கவிதையாகும். இந்த யாப்பு எளிதில் இயற்ற முடியாதது. இத்தகைய அரிய வண்ணங்களை சுவாமிகள் ஓசைநயத்துடன் எளிமையாகப் பாடும் சிறப்புநோக்கி இவரை 'வண்ணச்சரபம்' என வழங்கினர். முழுநீறு பூசி, காவிச் சிற்றுடை அணிந்து, விரித்தசிகை, கைத்தண்டு, உருத்திராக்க மாலை முதலியவற்றோடு விளங்கியதால் தண்டபாணி சுவாமிகள் என்றும் இவர் அழைக்கப்பட்டார். இவரது இயற்பெயர் சங்கரலிங்கம் என்பதாகும்.

வண்ணத்திற்கெனத் தனி இலக்கண நூல் முன்னோரால் இயற்றப்படாமை கண்டு அதற்காக வண்ணத்தியல்பு என்ற புதிய இலக்கண நூலை இவர் இயற்றினார். மேலும் இவர் அறுவகை இலக்கணம், புலவர் புராணம், பல சிற்றிலக்கியங்கள் ஆகிய நூல்களை இயற்றியுள்ளார்.

யமகம், திரிபு, சிலேடை, ஏகபாதம், நிரோட்டகம் போன்ற சித்திர கவிகளையும் மிகப்பலவாக அருளியுள்ளார். நிரோட்டகம் என்னும் வடசொல் இதழ் குவியும் தன்மை உடையதாக இருப்பதால் அதனை 'இதழகல்' என உதடுகள் குவியாத புதுப்பெயர் இட்டு அழைத்தார். இதற்கு நேர்மாறாக உதடுகள் ஒட்டியும் குவிந்தும் பிறக்கும் எழுத்துக்களை மட்டுமே கொண்டு 'குவிபா' எனப் புதிய வகை மிறைக்கவியை உண்டாக்கினார்.

தண்டபாணி சுவாமிகள் இறைப்பற்றுடன் தமிழ்ப்பற்று மிக்கவராக விளங்கினார். பல திருக்கோயில்களுக்குச் சென்று வழிபாடு செய்தபின் நடுநாட்டுத் திருத்தலமாக விளங்கும் திருவாமாத்தூரில் பத்தாண்டுகள் எல்லைதாண்டா விரதத்துடன் தங்கித் தவம்புரிந்து தமது ஐம்பத்தொன்பதாவது அகவையில் 5.7.1898இல் அருட்சமாதி அடைந்தார். இவர்தம் படைப்புக்கள் அனைத்தும் இவருடைய உபதேச பரம்பரையைச் சேர்ந்த சிரவை ஆதீனத்தில் பேணிக்காக்கப்படுவதுடன் அவற்றைப் பதிப்பிக்கும் முயற்சிகளும் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன.

# நூல் அறிமுகம்

வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகளின் சீடரால் கோவையில் நூறு ஆண்டுகளுக்கு முன் ஒரு மடம் நிறுவப்பட்டது. அது இப்பொழுது கௌமாரமடாலயம் என்ற பெயரில் இயங்கிவருகிறது. இங்கு தண்டபாணி சுவாமிகள் தம் கைப்பட எழுதிய ஓலைச் சுவடிகளைப் பாதுகாத்து வருகின்றனர். அச்சுவடிகளில் 'பதிக வருடம்' எனும் சுவடிப்பிரதியும் (சுவடிஎண். 26) ஒன்று. இச்சுவடி பக்கத்திற்கு 14 வரிகளாக இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது. இச்சுவடியிலுள்ள மொத்த ஏடுகள் 46.

தமிழ் வருடங்கள் அறுபது என்பதால் முருகப் பெருமானைப் போற்றும் 60 பதிகங்கள் கொண்ட இப்பதிகத் தொகுப்புக்குப் பதிக வருடம் எனப் பெயரிடப்பட்டுள்ளது. இந்நூல் பதிகத்திற்கு 12 பாடல்கள் வீதம் 60 பதிகங்களில் 720 பாடல்களைக் கொண்டுள்ளது. ஒவ்வொரு பதிகமும் ஒவ்வொரு யாப்பு வகையில் உள்ளது. எல்லாப் பதிகங்களிலும் முதல் பதினொறு பாடல்களின் ஈற்றுப் பகுதி ஒரேமாதிரி அமைந்து 12-ஆவது பாடல் நூற்பயனையும் ஆசிரியரையும் எடுத்துரைக்கிறது.

பதிகவருடம் எனும் இந்நூலின் 31ஆவது பதிகம் முதல் 40 ஆவது பதிகம் வரையான 10 பதிகங்கள் இங்கு பதிப்பிக்க எடுத்துக் கொள்ளப்பட்டது.

## யாப்பு

பதிக வருடம் எனும் இந்நூலில் கொச்சகக் கலிப்பா, கட்டளைக் கலிப்பா, கலிவிருத்தம், அறுசீர் விருத்தம், எண்சீர் விருத்தம், அறுசீர் வன்னம் ஆகிய யாப்புகள் பயின்றுவந்துள்ளன. இங்கு கொச்சகக் கலிப்பா முருகப் பெருமால் அருனகிரிக்கு அருள் புரிதலை விளக்கும் வகையில் அருணகிரிக்கு அருள்வோன் பதிகத்திலும், புலியூர் வருபாண்டி நாயகன் பதிகத்திலும் வந்துள்ளது. கட்டளைக் கலிப்பா அருணைத் தூணில் அமர்ந்தவன் பதிகத்திலும் கலிவிருத்தம் வள்ளி கழல்பணி கந்தன், தில்லை வேலவன் ஆகிய இருபதிகங்களிலும் அறுசீர் விருத்தம் ஓராறு வதனத்தான், கீழக் கோபுரத்துள்ளான் ஆகிய பதிகங்களிலும் எண்சீர் விருத்தம் கோபுர வடபாலில் குடிகொண்டோன் பதிகத்திலும் அறுசீர் வண்ணம் செந்தில் முருகன் பதிகத்திலும் வந்துள்ளது.

கொச்சகக் கலிப்பாவால் ஆன ஒரு பாடலில். முருகப்பெருமான் அருணகிரிக்கு அருள்புரிதலை,

> கமல நான் முகத்தோனும் கரியோனும் காளிபுகழ்
> விமலநா டகத்தோனும் விரும்பும் நலம் தருவாயோ
> முமலவேதனை தவிர்க்கும் முருகோனோ முழுதுணரும்
> அமல தேசிகனாகி அருணகிரிக் கருள்வோனோ!

எனவாறு தண்டபாணி சுவாமிகள் விளக்குகிறார்.

திருச்செந்தூர் முருகப்பெருமானை,

துங்க மதகரி நிகராநீர்
துன்று தவசிகள் உறவாலே
பங்கம் முழுவதும் ஒழியாதே
பன்றி எனநிதம் அலைவேனோ
பொங்கர் மிகுபல மலையானே
புந்தி அருள் சிவ குருநாதா
சிங்க முகன் உயிர் கவர் வோனே
செந்தில் நகர்வளர் முருகோனே.

என்று அறுசீர் வண்ணத்தால் மனம் உருகி பாடுகிறார்.

# நன்றியுரை

சுவடியியல் பட்டயவகுப்பில் சேர்ந்து பயில வாய்ப்பளித்த சென்னைப் பல்கலைக்கழகத்திற்கும் தமிழிலக்கியத்துறைக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

'பதிக வருடம்' என்னும் தலைப்பில் இப்பதிப்பு நூல் உருவாக நெறியாளராக இருந்து நெறிப்படுத்திய சென்னைப் பல்கலைக்கழகத் தமிழிலக்கியத்துறை முதுநிலை விரிவுரையாளர் முனைவர் ய. மணிகண்டன் ஐயா அவர்களுக்கும், இவ்வகுப்பில் சேர்ந்து பயில வாய்ப்பளித்த சென்னைப் பல்கலைக்கழகத் தமிழிலக்கியத் துறையின் தகைசால் பேராசிரியரும் என்னுடைய முனைவர்பட்ட ஆய்வின் நெறியாளருமான வ. ஜெயதேவன் ஐயா அவர்களுக்கும் நன்றி சொல்லக் கடப்பாடுடையேன். பதிப்பியல் அணுகுமுறைகளைத் தெளிவுற விளக்கிய தமிழிலக்கியத் துறைத்தலைவரும் பேராசிரியருமான வீ. அரசு ஐயா அவர்களுக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். என் ஆய்வுக்குக்காகத் தம் நேரத்தை ஒதுக்கிப் பலநிலைகளில் துணையாகி வழிகாட்டிக் கொண்டுள்ள முனைவர் சேயோன் ஐயா அவர்களுக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

தண்டபாணி சுவாமிகள் அருளிய பதிக வருடம் எனும் இந்நூலின் மூலச்சுவடியைக் கொடுத்துதவிய சிரவை ஆதீனம் தவத்திரு குமரகுருபர சுவாமிகள் அவர்களுக்கும், சுவடி தேர்ந்தெடுத்தது முதல் இவ்வாய்வேடு உருவாகக் காரணமான சிரவை யாதீனம் தவத்திரு கஜபூசைச் சுந்தர சுவாமிகள் தமிழாய்வு மையச் செயலாளர் புலவர் ப. வெ. நாகராஜன் ஐயா

அவர்களுக்கும் சுவடிக் கலைஞர் ஆர். கிருஷ்ண ராவ், நூலகர் திருமதி கவிதா ஆகியோர்க்கும் எனது நன்றியை உரித்தாக்குகிறேன்.

என் வளர்ச்சிக்கு நாளும் ஊக்கமளித்துக் கொண்டிருக்கிற என் பெற்றோர்க்கும், எனதருமைத் துணைவியார் மனோன்மணிக்கும், என் நினைவில் என்றும் வாழும் மாமா ராஜேந்திரன் அவர்களுக்கும் நன்றிசொல்லக் கடமையுடையேன். சுவடிப்பட்டய வகுப்புகளில் என் ஐயத்தைப் போக்கிப் பலவகையில் துணைசெய்த உடன்பயில் ஆய்வாளர் மா. வசந்தகுமாரி அவர்களுக்கும், கு. ராஜசேகரி அவர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

இவ்வாய்வேடு குறித்து அவ்வப்போது விளக்கமளித்து உதவிய கோ. வெற்றிச்செல்வி, மு. தேவராஜ் ஆகியோர்க்கும் துணைநின்று உதவிய நண்பர்கள் அனைவர்க்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். இந்நூல் அழகுற கணிப்பொறியில் அச்சேறி வெளிவரக் காரணமான நண்பர் இல. கணேசன் அவர்களுக்கும் நன்றி தெரிவித்துக் கொள்கிறேன்.

க. விநாயகமூர்த்தி

# பதிக வருடம்

## காப்பு

### நேரிசை வெண்பா

துதிகமழும் பன்னிருதோள்ச் சுந்தரவேள் மீது
பதிக வருட நன்னூல் பாட - நிதிகள்
அனைய இரு கைக்குருவாய் அன்பர் முன்பிலத் தோன்றி
வினை அழிக்கும் மெய்துணையா மே.

## 31. ஓராறு வதனத்தான் பதிகம்

### அறுசீர் விருத்தம்

1. நிசமிருக்கப் பொய்பேசிக் கெடுவார்போல்
உனக்கான நெறியை நீங்கி
அசமறுத்துக் கவுமார பூசைசெய்வோர்
உனதருட்பே றடைவார் கொல்லோ
தசமுகத்தோன் உயிர்குடித்தோன் மருகோனே
மலைமகள்முன் தந்த பாலா
வசமறப்பல் உயிர்களையும் அசைப்போனே
ஓராறு வதனத் தானே 1

2. விரதம்முத லியநோன்பும் புரிகிலேன்

நின்அருளே விரும்பி நாடும்

சரதரைக்கண் டிறைஞ்சுகிலேன் ஆனாலும்

உனதாண்மை சற்றே தந்தாள்

சுரருலகு குடியேறப் பொருதோனே

மலைதோறும் துலங்கும் கோவே

மரகதமா மயில்ஏறி வருவோனே

ஓராறு வதனத் தானே 2

3. தீங்கருப்புச் சிலைவாங்கி மலர்வாளி

பொழிபவனே தெய்வம் என்னும்

பாங்கருடன் திரிந்தேனை ஒருகனவில்த்

தனதடிமைப் படுத்த லாமோ

நீங்கரிய நிறைவான தனிப்பொருளை

உணர்த்திநிற்கும் நிமல வேளே

மாங்கனிக்காப் புவியையவலம் வந்தோனே

ஓராறு வதனத் தானே 3

4. கனவாதி அவத்தைகளில்ப் பலவாறு
தோன்றிநின்று கழறும் சொல்லால்
இனவாஞ்சை அதிகரிக்கத் தளர்கின்றேன்
களிகூர்வ தென்றோ சொல்லாய்
மனவாக்குக் காயம்எனும் மூன்றாலும்
உணர்வரிய மயமா நின்றும்
வனவாச மாதிடம்போய் அணைந்தோனே
ஓராறு வதனத் தானே 4

5. கொங்கைகளால் மனம்கவரும் கொடியிடையார்
மயல்க்கடலில் குளிக்கும் தீயேன்
செங்கையினால்ப் புரிபூசை தீதாம்என்
றிகழ்ந்தனையோ செப்பல் வேண்டும்
கங்கைதரு பாலகனே கார்த்திகைப்பெண்
ணார்வளர்த்த கந்த வேளே
மங்கைநல்லார் இருவருக்கும் மணவாளா
ஓராறு வதனத் தானே 5

6. பருவம்அறிந் தடியவருக் கருள்புரிவாய்
எனச்சிலநூல் பகரக் கேட்டுத்
திருவருட்சீர் யாவும்வல்ல தல்லவோ
எனக்கருதித் தியங்கா நின்றேன்
அருவமுடன் உருவமுமாய் அருவுருவும்
ஆகிநிற்கும் அமல வேளே
மருவளரும் கடம்பணிந்த புயத்தானே
ஓராறு வதனத் தானே 6

7. ஒருகனவில் ஒருவாறு கண்டமையால்
திருவருணை ஊருக் கேகில்
அருள்பெறலாம் எனக்கருதிச் செல்கின்றேன்
இவையாவும் அறியாய் கொல்லோ
தெருளுடையார் அனைவருக்கும் தலையாய
புலவோனே செவ்வேல்க் கையா
மருள்மிகுத்தோர் உணர்வரிய பெருமானே
ஓராறு வதனத் தானே 7

8. நீறுகொடி தென்றோரைக் காழியர்கோன்
கொன்றதொன்றும் நிசமே ஆகில்
ஏறுபதைப் புறவதைத்து நுகர்வோருக்
கெமன்ஒருவன் இலங்கி டானோ
வேறுபடு தெய்வமுற்றும் தானேஎன்
றடியாருள் விளக்கும் கோவே
மாறுதவிர் பெரியோனே மதியனைய
ஒராறு வதனத் தானே 8

9. நாரணன்கைப் பிரம்பேந்தி நெருள்விலக்கக்
கொலுவிருந்து நாகத் துள்ளோர்
மாரணத்தில்ப் பெரிதாய துயர்சேரச்
செயும்சூரை மடித்தி லாயோ
காரணகா ரியம்கடந்த முதற்பொருளே
யாவும்வல்ல கந்த வேளே
வாரணகே தனம்உடைய முருகோனே
ஒராறு வதனத் தானே 9

10. தேவரது செருக்கழியப் புரம்எரித்தோன்

அருள்வழியும் செங்கண் மாயோன்

பூவகத்தில் அவதரித்தோன் முதல்எவரும்

நீஎன்றே புகல்வேன் கண்டாய்

பாவனையில் அடங்காத வடிவுடையாய்

கொடிமுயன்ற பாதத் தானே

மாவலறி வீழவென்ற வடிவேலா

ஓராறு வதனத் தானே 10

11. முழுத்தஉபா சனைஉடையார் எண்ணம்போல்

வடிவுகொண்டு முன்னே தோன்றி

அழுத்தம்அவர்க் கெதனிலோ அதனையே

விளக்குவிப்ப தறிந்தேன் கண்டாய்

கொழுத்தமலம் மூன்றும்அறக் குறுநகையால்த்

திருநோக்கால் குறித்துப் பின்னர்

வழுத்தரிய பொருள்அளிக்கும் குருபரனே

ஓராறு வதனத் தானே 11

12. முத்துதிர்த்துத் தருவினத்தைக் கறுவிவளர்
மூங்கில்வன முருக தாசன்
சித்துமய மாகியதோர் ஆறுமுகப்
பெருமான்மேல் செப்புபாடல்
பத்தும்ஒன்றும் கருதியதன் பயன்உணர
வல்லாரைப் பாம்பும் பேயும்
பித்துமுத லியநோயும் அணையாது
மூன்றுலகும் பேசு மன்றே. 12

# 32. அருணாசல வேலோன் பதிகம்

'பொன்னார் மேனியனே போன்ற தேவாரப்பண் - நட்டராகம்'

13. மானார் ஆசையினால் மனம் வாடி வழிமாண்டு
போனால் ஏசாரோ அருட் போதம் அளித்தருள்வாய்
வானா டர்க்கரசே மயில் வாகனம் உள்ளானே
ஆனா நல்லமுதே அரு ணாசல வேலோனே. 1

14. கற்றார் தம்குழுவைத் தினம் கண்டு களிகூர்ந்து
பற்றா மெய்த்தவமே தினம் பண்ணும் நலம்தருவாய்
முற்றா மென்முலையார் விழி மொய்த்த புயத்தானே
அற்றார் தம்உறவே அரு ணாசல வேலோனே. 2

15. பாகன சொல்மடவார் இரு பம்பரக் கொங்கையினால்
சோகம் உறத்தளர்வேன் படும் துன்பம் ஒழியாதோ
நாகர் தொழும்குகனே மலர் நான்முகன் மைத்துனனே
ஆகம வித்தகனே அரு ணாசல வேலோனே. 3

16. நாறிய கார்குழலார் தமை நாடிய நாயடியேன்
வீறிய மெய்அடியா ருடன் மேவுவ தெந்நாளோ
தேறினர் தம்குருவே உயர் செந்தமிழ் வல்லோனே
ஆறிரு தோளுடையாய் அரு ணாசல வேலோனே. 4

17. பாடும் நலம்தரும்நீ உனைப் பற்றிய மெய்யுணர்வில்
கூடி விளையாடும் செயல் கொஞ்சமும் நல்காயோ
நாடு மவர்க்கெளியாய் தமிழ் நாவலர் தம்அரசே
ஆடும் தாளானே அரு ணாசல வேலோனே. 5

18. பொற்புறு மென்முலையே உயர்போகம் எனக்கருதி
நற்புகழ் கொள்ளார்பால் நிதம் நானும் நடப்பேனோ
மற்புரி யும்தோளாய் எழில் வாரணம் உள்ளானே
அற்புத வெற்றியனே அரு ணாசல வேலோனே. 6

19. நீறு புனைந்திலனோ உனை நித்தமும் நண்ணிலனோ
பேறு பொருந்தாமல் மனம் பேதலிக் கின்றேனே
ஈறு தவிர்ந்தோனே மயில் ஏறிய சேவகனே
ஆறு முகத்தானே அரு ணாசல வேலோனே. 7

20. வீழி நறுங்கனிநேர் இதழ் மெல்லிய ருக்குருகாக்
காழி நகர்ப்புலவோன் புகழ் கற்பவ ரைக்கழியேன்
ஏழிசை வல்லோனே நிறைந் தெங்கும் இருப்போனே
ஆழியை வென்றோனே அரு ணாசல வேலோனே. 8

21. அண்டர்கள் எல்லோரும் மன தஞ்சி அவன்ஏவல்த்
தொண்டர்கள் ஆகியநாள் கொடும் சூரனை வென்றிலையோ
வெண்டகைச் சேவலனே மயில் மேல்வரும் வித்தகனே
அண்டரும் மெய்ப்பொருளே அரு ணாசல வேலோனே 9

22. மூவரும் கைதொழும்ஓர் முதல் மூவிரு மாமுகன்என்
றேவரும் சொல்லியும்நான் இடைந் தெங்கும் அலைவேனோ
சேவலை யேபுகழ்வோர் திருச் சிந்தை யிடம்தோன்றும்
ஆவல்எல் லாம்தருவாய் அரு ணாசல வேலோனே. 10

23. எக்குரு வும்குகனே என எண்ணி இருப்பேனும்
பொய்க்குரு வைப்பணிவார் எனப் புந்தி மருள்வேனோ
திக்கு முழுதுணர்வாய் அடல்ச் சேவற் கொடியானே
அக்குடை யான்மகவே அரு ணாசல வேலோனே. 11

24. சித்தர்கள் சேர்பொதியை தரும் செம்பு நதியதன்பால்
முத்தமிழ் நெல்வேலித் தவன் மூதரு ணைக் குகன்மேல்
பத்தர் களிகூரப் பகர் பாடல் பதினொன்றும்
சுத்த மனத்தோடும் தினம் சொல்பவர் நல்லவரே 12

# 33. அருணைக்கோபுரத்துள்ளான் பதிகம்

## அறுசீர் விருத்தம்

25. பாடியும் பணிந்தும் பூசை
பலபல விதமாச் செய்வோர்
ஊடினாற் களித்தி டாமல்
உளத்தினில்ச் சினம்கொள் வாயோ
நாடிய பெரியோர் நெஞ்சில்
நடம்புரி நளினத் தாளா
கேடில்சீர் அருணைக் கோயில்க்
கீழக்கோ புரத்துள் ளானே 1

26. தெளிவிலா ருடனே கூடிச்
சிந்தைநொந் துழலும் தீயேன்
களியெனும் கடலில் மூழ்கிக்
கவிமழை பொழிவேன் கொல்லோ
அளிமுரல் கடப்ப மாலைக்
கழகிய புயங்க ளானே
கிளிமிகும் அருணைக் கோயில்க்
கீழக்கோ புரத்துள் ளானே 2

27. வளர்வுறும் கவலை நோயால்
மனம்மிக வருந்த நாயேன்
தளர்வது தெரிந்தும் அந்தோ
சற்றும்நீ இரங்கி லாயே
குளமிசை விழிஆ றுள்ள
குமரனாம் குறிஞ்சிக் கோவே
கிளர்தமிழ் அருணைக் கோயில்க்
கீழக்கோ புரத்துள் ளானே 3

28. பெரியவர் எவர்க்கும் தாயாப்
பிறங்கும்நின் அருளே வேண்டித்
திரிதரு தமிய னேனும்
சிதடர்பால் இரக்க லாமோ
அரிஅயன் பொருத நாளில்
அவர்மதம் அழியத் தோன்றும்
கிரிஅரு கருணைக் கோயில்க்
கீழக்கோ புரத்துள் ளானே 4

29. தழல்நிகர் மிடியால் வாடித்
தயங்குறும் தமிய னேனை
அழகிய சிகியில்த் தோன்றி
அருள்புரிந் தாள்வாய் கொல்லோ
மழவிடை யதனில் மேனை
மகளொடு வருவோ ரான
கிழவனார் அருணைக் கோயில்க்
கீழக்கோ புரத்துள் ளானே 5

30. வளைஅணி கரத்து மானார்
மயலிடை வருந்தும் நாயேன்
அளைநுகர் கரியோ னாம்என்
றவிர்வதென் றறைய வேண்டும்
இளையவன் எனப்பல் லோரும்
இயம்பிடும் இறைவா எங்கள்
கிளைமிகும் அருணைக் கோயில்க்
கீழக்கோ புரத்துள் ளானே 6

31. கார்த்திரள் விளங்கில் ஆடும்
கலபமா மயிலில்த் தோன்றிப்
பூர்த்தியாக் கிருபை செய்தால்ப்
புகழ்எனப் புகல்வ தேனோ
வார்த்திக முனிவ னாகி
வனத்தினில் புகுந்த வேளே
கீர்த்திசேர் அருணைக் கோயில்க்
கீழக்கோ புரத்துள் ளானே 7

32. சடைத்தலைப் பெருமான் மருவும்
சண்பையில்த் தமிழ்நூல் வல்லான்
குடைத்திரு நிழலில் வாழும்
குடிகளும் கொதிக்க லாமோ
படைத்திடும் தொழிலோன் தன்னால்ப்
பலஉடல் சுமப்போர் காணக்
கிடைத்திடா அருணைக் கோயில்க்
கீழக்கோ புரத்துள் ளானே 8

33. கொஞ்சுமென் மொழியா ளான
குறத்தியொ டொருக்கால் என்றன்
நெஞ்சுளே நடித்த கோலம்
நினைத்ததோ நிகழ்த்த வேண்டும்
நஞ்சுறழ் கொடும்சூர்க் கொன்ற
நாதனே நடந்தோர் மின்பால்க்
கெஞ்சுவான் அருணைக் கோயில்க்
கீழக்கோ புரத்துள் ளானே 9

34. வாளினேர் விழியாள் பாகன்
மாயவன் மலரோன் வேண்டும்
தாளினைச் சிறிய னேன்றன்
தலைமிசை அணியொண் ணாதோ
வேளிடர் தவிர்ந்து பால்போல்
வெளுத்தநீ றணிந்து வாழ்வோர்
கேளிசூழ் அருணைக் கோயில்க்
கீழக்கோ புரத்துள் ளானே 10

35. உளத்தினிற் கருதும் வாறே

உருக்கொளும் குருவாம் உன்னை

வளத்திருச் செந்தூர்ச் சந்த

வரையிடத் துணர்ந்தேன் அன்றோ

சளத்தபாழ் வினையோ ராகித்

தவிப்பவர் சாற்றும் புன்னூல்

கிளத்தரும் அருணைக் கோயில்க்

கீழக்கோ புரத்துள் ளானே 11

36. எண்ணிலார் வாழச் செய்யும்

இயல்புடை அருணைக் கோயில்ப்

புண்ணியச் சிகரி வாழும்

புனிதவேள் மகிழு மாறு

நண்ணிய விதத்தால்ப் பாண்டி

நாவலன் ஒருவன் பாடல்

எண்ணிய கருத்தி னோரும்

இகல்அறுத் தளிகூர் வாரே 12

# 34. அருணகிரிக் கருள்வோன் பதிகம்

## கொச்சகக் கலிப்பா

37. செந்தழலில் மெழுகதுபோல் தினம்உருகித் தளர்வேன்முன்
வந்தருட்பே றளிப்பதற்கு மயில்இருந்தும் தாமதம்ஏன்
கந்தமலர்க் குழல்வள்ளி கணவனாம் காரணனே
அந்தகனுக் கஞ்சாமை அருணகிரிக் கருள்வோனே 1

38. கருந்தனமே உயர்வென்னும் கயவரிடம் கையேந்தி
வருந்தல்எனைச் சேராமல் மலர்க்கண்ணால்ப் புரிவாயோ
பெருந்தவர்தம் அறிவகத்திற் பிறங்கும்அயில்ப்பெருமானே
அருந்தமிழ்ப்பாப் பகரும்நலம் அருணகிரிக் கருள்வோனே 2

39. கரிநாணும் முலையார்தம் கலவியதும் கசப்பாவான்
எரிநேர்உன் திருமேனி எதிர்விளங்கப் பெறுவேனோ
மரியாத முருகோனே வானவர்கோன் மருகோனே
அரிபோலத் திகழ்ஆண்மை அருணகிரிக் கருள்வோனே 3

40. பொருளாசை மயமாய புலவோரில்த் தமியேனும்
மருளாமல் மெய்யடியார் மாட்டிருக்கப் பெறுவேனோ
வெருளாத வாழ்வளிக்கும் வெற்றிவேல்ப் பெருமானே
அருள்ஆக்கம் அத்தனையும் அருணகிரிக் கருள்வோனே 4

41. தென்பரங்குன் றாதியவாம் திருத்தலங்கள் தொறும்ஏகி
நின்பதமே கதிஎன்று நினைத்தபடி துதிப்பேனோ
வன்பர்உணர் வரியானே மயிலேறும் பெருமானே
அன்பணைந்த மாதவப்பேறு அருணகிரிக் கருள்வோனே 5

42. தேறாத நெஞ்சகத்தால்த் தினந்தோறும் துயர்ப்படுவேன்
நீறார்ந்த மலைபோல நீவருதல் காண்பேனோ
சாறாடும் குகவேளே தவிர்க்கரிய தத்துவங்கள்
ஆறாறும் கடந்தநிலை அருணகிரிக் கருள்வோனே 6

43. துட்டராம் அவரோடு சுழல்கின்ற தொழிலுடையேன்
சிட்டர்சேர் திருச்சபையில் தினந்தோறும் பழகேனோ
மட்டறா மலர்க்கடப்ப மாலைபுனை தோளானே
அட்டமா சித்தியையும் அருணகிரிக் கருள்வோனே 7

44. காழியூர்த் தமிழ்ப்புலவன் கருஞ்சமணர்த் தடிந்தாற் போல்
பாழிலே கதறுமவர் பதைபதைப்பத் தடிவோனே
கோழியேந் தியகரத்துக் குமரகுரு பரவேளே
ஆழிநேர் பெரும்புகழ்ச்சி அருணகிரிக் கருள்வோனே 8

45. கூரவாட் படைதாங்கிக் குதித்துநகைத் தெதிர்தோன்றும்
சூரனாம் அவுணன்உயிர் தொலைத்தபுகழ் மொழிவேனோ
மாரவேள் மனம்நாணும் வடிவுடைய முருகோனே
ஆரணா கமப்பொருளை அருணகிரிக் கருள்வோனே 9

46. கமலநான் முகத்தோனும் கரியோனும் காளிபுகழ்
விமலநா டகத்தோனும் விரும்பும்நலம் தருவாயோ
மும்மலவே தனைதவிர்க்கும் முருகோனே முழுதுணரும்
அமலதே சிகனாகி அருணகிரிக் கருள்வோனே 10

47. பொழில்நேரும் குழலார்தம் பொருப்புமுலை விருப்பொழிந்துன்
வழிபாடு புரியுமவர் வருந்துவதும் பொறுப்பாயோ
விழிஆறு மூன்றுடைய மெய்யனாம் குருபரனே
அழியாத சமரசவாழ்வு அருணகிரிக் கருள்வோனே 11

48. கொஞ்சுமயில்ப் பரிஊரும் குமரகுரு பரனாகி
அஞ்சுபொறிக் கடங்காமை அருணகிரிக் கருள்வான்மேல்
விஞ்சுதமிழ்த் திருநெல்லை மேயான்சொல் பதிகம்உறும்
நெஞ்சுடையார் அனைவருக்கும் நிறைவாய புகழ்உண்டே
12

# 35. கோபுர வடபாலில் குடிகொண்டோன் பதிகம்

## எண்சீர் விருத்தம்

49. பிறைநுதலார் மயல்க்கடலில் குளிக்கச் சோம்பேன்
பெரியோரைத் தினம்இகழ்வேன் பேறொன் றில்லேன்
மறைநூலும் ஆகமமும் உணர்ந்து ளார்போல்
வாதிப்பேன் எவ்வண்உய்வேன் மயில்மேல் வந்தாள்
நிறைவாகி அடியவர்க்காச் சகள மாய
நிமலனே மலைதோறும் நிலவும் தேவே
குறைவிலார் மருவுதிரு அருணை மூதூர்க்
கோபுரத்தின் வடபாலில் குடிகொண் டோனே. 1

50. பொல்லாதேன் ஆனாலும் வடிவேல் ஏந்தும்
புனிதவேள் அடிமைஎனப் புவியோர் கூறும்
சொல்லால்வந் தாண்டருளில் புகழே அன்றோ
தொழும்பரோ டிணக்கிஅருட் சுகத்துள் உய்ப்பாய்
கல்லாலின் கீழ்இருந்தோன் குரவா! செல்வக்
கதிர்காமப் பதியில்வளர் கடவு ளானே
கொல்லாத விரதர்மிகும் அருணை மூதூர்க்
கோபுரத்தின் வடபாலில் குடிகொண் டோனே. 2

51. செற்றமிகும் திருக்கைவேல்ப் படையும் கீளும்
திருநீறும் கோவணமும் திகழத் தோன்றி
மற்றவரை மதியாமல் பெரிது வாழும்
வாழ்வளித்துக் காத்தருள வல்லாய் அன்றோ
பற்றகன்ற மாதவருக் கெளியாய் செந்திற்
பதியுடையாய் யாவும்வல்ல பண்பி னானே
குற்றமிலாப் புகழுடைய அருணை மூதூர்க்
கோபுரத்தின் வடபாலில் குடிகொண் டோனே. 3

52. இரங்குகிலாப் புன்மனத்துக் கயவர் தம்பால்
இரப்பதஞ்சிப் பெரிதயரும் எளிய னேனை
வரங்குலவு திருவருளால் தடுத்தாட் கொள்வான்
மயிலேறி வேல்ஏந்தி வரத்தான் வேண்டும்
சுரங்குளிரத் தொட்டவெண்ணீ றுடையாய் விண்ணோர்
துயர்தவிர்த்தாய் மலைதோறும் துலங்கி நின்றாய்
குரங்குலவும் பொழில்சூழும் அருணை மூதூர்க்
கோபுரத்தின் வடபாலில் குடிகொண் டோனே. 4

53. பழித்தவர்க்கும் அருள்புரிவாய் என்று பல்லோர்
பகர்வதுகட் டுன்மீது பாடிப் பாடிக்
கிழித்ததென்மேல்க் குற்றம்எனச் சொல்வாய் கொல்லோ
கேகயத்தில் ஏறிவந்து கிருபை கூர்வாய்
செழித்தபுகழ் அருணகிரிப் புலவன் தானும்
திருநமசி வாயன்முதல் சீரி யோரும்
கொழித்ததமிழ்க் கவிமுழங்கும் அருணை மூதூர்க்
கோபுரத்தின் வடபாலில் குடிகொண் டோனே. 5

54. உன்றனது பூசனையும் புகழும் சீரும்
உன்னியவா றுலகத்தில் ஒளிர்தல் ஒன்றே
என்றனக்கு வேண்டுவதென் றிறைஞ்சு வேனுக்கு
இரங்காயேல்ப் புறம்புள்ளார் இகழ்வார் அந்தோ
நன்றனைத்தும் நல்கவல்ல பெருமை யானே
நான்குதோள் உடையானே நவில்சீர் எல்லாம்
குன்றல்உறா தோங்கும்எழில் அருணை மூதூர்க்
கோபுரத்தின் வடபாலில் குடிகொண் டோனே. 6

55. வடவைமுகம் உடையசெந்தீ இலவம் பஞ்சால்
மறைந்தாற்போல் நீஇருக்க மனம்புண் ஆனேன்
புடவியில்பற் பலதமிழ்நூல் உரைத்த வாறுன்
புகழ்விளங்க விளையாடல் புரிய வேண்டும்
நடனமயில்ப் பரிஊரும் முருகா பாண்டி
நாயகனே தில்லைமன்றில் நடிப்போன் மைந்தா
குடவளைமுத் துமிழ்வீதி அருணை மூதூர்க்
கோபுரத்தின் வடபாலில் குடிகொண் டோனே. 7

56. ஏழிசைமுத் தமிழ்பாடிச் சைவம் ஓங்க
இயற்றுவான் காவிரிசூழ் இயற்சோ ணாட்டுக்
காழியில்வந் தவதரித்தெம் பாட்டி யார்தம்
கலசமுலைப் பால்குடித்த காளை யாரோ
பாழிநெடும் புயம்இருமூன் றுடையாய் நெல்லைப்
பதியில்எனக் குடல்அளித்த பழமை யானே
கோழிஉறும் கரத்தானே அருணை மூதூர்க்
கோபுரத்தின் வடபாலில் குடிகொண் டோனே. 8

57. வெஞ்சரம்தொட் டமர்ஆடும் கொடும்சூர் மார்பின்
மின்எனப்போய்த் துளைத்தவைவேல் வீரன்நீயேல்
பஞ்சரத்துப் பறவைஎன வாடும் நாயேன்
பதைப்பொழிய நினைத்தபடி பாலித் தாள்வாய்
வஞ்சர் அறிவரியானே யாவும் ஆன
வரதனே யாதிடத்தும் மருவா தானே
குஞ்சரங்கள் விளையாடும் அருணை மூதூர்க்
கோபுரத்தின் வடபாலில் குடிகொண் டோனே. 9

58. செங்கமலப் போதுடையான் ஆழி ஏந்தும்
திருநெடுமால் எயில்மூன்றும் செற்ற வாயான்
தங்கள்உயிர்த் துணையாம்நீ இரங்கி லன்றித்
தவம்புரிந்து காணவல்லேன் தமியன் தானே
மங்கலகோ லாகலச்சண் முகனே ஏனல்
வனத்தினில்ப்போய் வளையல்விற்ற வணிகாவண்மைக்
கொங்கவிழும் பூஞ்சோலை அருணை மூதூர்க்
கோபுரத்தின் வடபாலில் குடிகொண் டோனே. 10

59. செவ்வையாம் அறிஞரெனத் தம்மைத் தாமே
தினம்புகழும் அவர்மனமும் திருத்தி ஆவான்
கௌவைதீர்த் தருளும்எழிற் குருவாத் தோன்றும்
கடவுளாம் உனைவிழைந்தும் கவலு வேனோ
ஔவையா ரும்புகழும் முருகா செந்தில்
ஆதிபனே எனைஆண்ட அருட்கண் ணானே
கொவ்வைவாய்க் குறத்திபங்கா அருணை மூதூர்க்
கோபுரத்தின் வடபாலில் குடிகொண் டோனே. 11

60. முத்துடைய நெடுஞ்சாலி வாடி ஊரின்
முருகவேள் அடிமைஎன முளைத்த நாயேன்
கொத்துலவும் மலர்ப்பொழில்சூழ் அருணை மூதூர்க்
கோபுரத்தின் வடபாலில் குடிகொண் டோன்மேல்
பத்துடன்ஒர் கவியாகத் தொடுத்த மாலை
படிப்போரும் கேட்போரும் பயன்கொள் வோரும்
தத்துமுழு தும்தவிர்ந்து புவியில் வாழ்ந்து
சாமீபம் பெறுவர்எனச் சாற்ற லாமே. 12

# 36. அருணைத் தூணில் அமர்ந்தவன் பதிகம்

## கட்டளைக் கலிப்பா

61. முகிலைப் போல்ஒளிர் மொய்குழல் மங்கைமார்
முத்த மிட்டு முருக்கிதழ் ஊட்டியே
நகிலப் போர்பொரு கேளியை நாடியே
நானும் நெஞ்சொடு நைவது ஞாயமோ
எகினத் தோனைமுன் மோதிய கையனே
என்றன் உள்ளும் இருக்கும்முத் தையனே
அகிலத் தோர்களும் மெச்சிய வேலவா
அருணைத் தூணில் அமர்ந்தருள் அண்ணலே.1

62. மானை வென்றகண் மங்கையர் கொங்கையால்
வாடும் என்னை வலியவந் தாண்டநீ
ஏனையோர்களுக் கஞ்சிடச் செய்வதேன்
இன்ன ஞாயம தென்றினி தோதுவாய்
தேனை நேர்மொழிக் குஞ்சரி கேள்வனே
செந்த மிழ்க்கடல் சேர்அமிழ் தன்னவா!
ஆனை மாமுகன் பின்வரும் வேலவா
அருணைத் தூணில் அமர்ந்தருள் அண்ணலே.2

63. மேதி னிக்குள் வரும்பல தொண்டர்தாம்

மெய்மை ஆகிய வீடுற விட்டநின்

நீதி கண்டுனை நாடிய நாயினேன்

நெஞ்சு வப்புறும் நேரமும் உள்ளதோ

சோதி மாமணிக் குன்றுறழ் கந்தனே

தூய வானவர் துன்பறச் செய்தவா

ஆதி முத்தன் எனத்திகழ் வேலவா

அருணைத் தூணில் அமர்ந்தருள் அண்ணலே.3

64. நேத்தி ரத்தெதிர் நீவரல் நாடியே

நெஞ்சம் நொந்து நெடிதுயிர்த் தோயுநான்

சாத்தி ரப்பொருள் ஓர்கிலன் உண்மையே

தஞ்சம் என்று தமிழ்க்கவி பாடுவேன்

சூத்தி ரத்தொகை பாடிய மாமுனி

துன்ப நோய்அறச் சூட்டிய பாதனே

ஆத்தி ரம்தவிர்த் தாண்டருள் வேலவா

அருணைத் தூணில் அமர்ந்தருள் அண்ணலே.4

65. ஆறெ டுத்த சடைத்தலை யாளனோ

டன்று ரைத்த தறிந்திடும் ஆசையாம்

பேறெ னக்குக் கொடுத்தநின் பாதமே

பேணுகின்ற பெரும்தவம் நல்குவாய்

கோறெ னப்பகர் சொல்லினும் அஞ்சுவார்

கும்பி டும்படி குன்றுதொ றாடுவாய்

ஆறெ ழுத்துரு ஆகிய வேலவா

அருணைத் தூணில் அமர்ந்தருள் அண்ணலே.5

66. தென்ப ரங்கிரி ஆதிய குன்றெலாம்

சென்று சென்று திருப்புகழ்ப் பாடுவான்

உன்ப தந்தனைச் சிந்தனை செய்குவேன்

உய்யும் வண்ணம் உதவிசெய் தாளுவாய்

மன்ப தைக்கொரு தாயகம் ஆனவா

வாரணத்தில் வருங்குரு நாதனே

அன்பர் நெஞ்சகத் துள்ளுறை வேலவா

அருணைத் தூணில் அமர்ந்தருள் அண்ணலே.6

67. மட்ட றாமலர்க் கார்குழல்ப் பேதையார்
வாஞ்சை கொண்டு மயங்கிய வஞ்சனேன்
சிட்ட ரோடு குலாவிநின் தொண்டெலாம்
செய்து வாழும் சிறப்பினில்த் தோய்வனோ
நட்ட மாடிய நம்பனும் கைதொழும்
நாத னேபர ஞான விநோதனே
அட்ட திக்கும் புகழ்ந்திடும் வேலவா
அருணைத் தூணில் அமர்ந்தருள் அண்ணலே.7

68. காழி யிற்களி றன்னமெய்த் தொண்டனால்
கவலை நோய்அறக் காண்பது வேண்டுவார்
வாழி என்று கருதிடும் நாயினேன்
வம்பில் இங்கு மடிந்திடல் ஆகுமோ
தோழி மாருடன் ஏனலில் வாழும்ஓர்
தோகை முன்பு தொழுதெழும் சோரனே
ஆழி வற்ற முனிந்திடும் வேலவா
அருணைத் தூணில் அமர்ந்தருள் அண்ணலே.8

69. காசி பன்தரு காருடல்ச் சூரனைக்

கண்கள் ஆயிரம் உள்ளவற் காகவேல்

வீசி வென்றவன் நீஎனில் உன்புகழ்

வேலை யிற்செல விட்டிடல் என்கொலோ

வாசி யாம்எனச் செந்தகர் ஏறிய

வள்ள லேகுறு மாமுனி வன்தமிழ்

ஆசி கேட்டருட் செய்திடும் வேலவா

அருணைத் தூணில் அமர்ந்தருள் அண்ணலே.9

70. வெண்ட கைக்கொடி கேள்வனு மாயனும்

வெள்ளி வெற்பில் விளங்கிய நாதனும்

பண்ட ருச்சனை செய்தநின் பாதமே

பற்றி நின்றும் பரதவிப் பாறிலேன்

கொண்டல் ஏழுடை யான்மகள் கேள்வனே

கூதளத்தொடை கொண்டதிண் தோளனே

அண்டர் தம்சிறை மீட்டவை வேலவா

அருணைத் தூணில் அமர்ந்தருள் அண்ணலே.10

71. குரவர் யாவரும் கைதொழும் உன்னையே
கூவும் என்னொடு கூறிய சொல்எலாம்
வரவ ரத்துயர் மீறிடச் செய்வதால்
வாடி நெஞ்சம் மலைந்தனன் அல்லவோ
சரவ ணத்தடம் தாமரை ஏறிய
சண்முகச்சிவ னேதலை ஆயிரத்து
அரவ ணைக்குரி யான்தொழும் வேலவா
அருணைத் தூணில் அமர்ந்தருள் அண்ணலே.11

72. கருணை சேர்திரு நெல்லைத் திருப்புகழ்க்
காரன் உள்ளம் களிக்கும் நிமித்தமே
அருணைத் தூணில் அமர்ந்தருள் அண்ணலார்
அம்பு யப்பதத் தன்பொ டணிந்தபாட்டு
ஒருபத்தோ டொன்றும் கற்பவர் கேட்பவர்
உள்ளு றும்பொருள் ஓர்பவர் உண்மையாம்
சொருபத் தேஉற வாகிய ஞானமும்
தூய சித்தியும் தோய்வுறு வார்களே. 12

# 37. வள்ளி கழல்பணி கந்தன் பதிகம்

## கலி விருத்தம்

73. அறுத்த மீன்உயி ராதல்மெய் யாகில்யான்
வெறுத்தெ றிந்த வியன்தமிழ் ஈகுவாய்
பொறுத்த மேலவர் புந்தியிற் புண்ணியா
கறுத்த வள்ளி கழல்பணி கந்தனே 1

74. மான மின்றி மனிதர்தம் பால்இரந்து
ஈன னாம்முன் எனக்கருள் செய்குவாய்
ஞான யோகியர் நாடிய பாதனே
கான வள்ளிக் கழல்பணி கந்தனே 2

75. உன்றி னைப்பில் உழன்றிடும் நாயினேன்
பொன்னில் ஆசை பொருந்திடப் போகுமோ
சென்னி ஆறுடைச் செந்தழல் மேனியாய்
கன்னி வள்ளி கழல்பணி கந்தனே 3

76. நீம கிழ்ந்து நிகழ்த்திய சொல்எலாம்
தாம தப்படும் தன்மைகண் டஞ்சினேன்
கோம ளக்குக னாகிய கொற்றவா
காமர் வள்ளி கழல்பணி கந்தனே 4

77. வேதம் ஆகமம் ஓதிய வீறுகண்டு
ஏதம் இன்றி இருப்பதென் றோதுவாய்
போதம் ஆய புராதனத் தெய்வமே
காதல் வள்ளி கழல்பணி கந்தனே 5

78. மயற்பெ ரும்பிணி வாதனை நீங்கிநின்
செயற்கு ளேனது சிந்தை அடங்குமோ
இயல்த்த மிழ்க்கருள் ஈந்திடும் எந்தையே
கயற்கண் வள்ளி கழல்பணி கந்தனே 6

79. தேக்கு செந்தமிழ்ச் சீர்தரும் உன்னையே
நோக்கும் என்மனம் நோவது ஞாயமோ
வீக்கு லங்கள் வெருண்டெழச் செந்தினை
காக்கும் வள்ளி கழல்பணி கந்தனே 7

80. பொருவில் காழியில்ப் புங்கவன் போலஈண்டு
ஒருவன் இன்னம் உதித்திட வேண்டுமால்
மருள்ம லிந்த மனத்தினர் காணொணாக்
கருணை வள்ளி கழல்பணி கந்தனே 8

81. பொய்கொள் மாயைதன் புத்திரன் பொன்றுவான்
வைகொள் வேல்விடும் வல்லபம் இல்லையோ
நெய்கொள் மாவைநன் னேயமொ டீந்தமென்
கைகொள் வள்ளி கழல்பணி கந்தனே 9

82. முண்ட கத்தன் முரகரி முக்கணான்
கொண்ட பேறு குறித்துனைக் கூவினேன்
விண்த லத்தொரு மேலவன் ஓதல்போல்
கண்ட வள்ளி கழல்பணி கந்தனே 10

83. குரவர் யாவரும் கும்பிடும் கொள்கையால்
சரவ ணத்தில்த் தழைத்தனை அல்லவோ
பரவு வார்புனை பங்கய பாதனே
கரவில் வள்ளி கழல்பணி கந்தனே 11

84. மாசில் சாலி வளம்பதிப் பாவலன்
காசில் வள்ளி கழல்பணி கந்தன்பால்
பேசி டும்பதி கம்சொலப் பெற்றுளார்
தேசி கப்பதம் சேர்வது திண்ணமே 12

## 38. தில்லைவேலவன் பதிகம்

### கலிவிருத்தம் - வேறு

85. பவவே தனையுட் படுபா வியுமெய்த்
தவரோ டுறுதன் மைபொருந் துவனோ
நவமார் மலைதோ றுநடம் புரிவாய்
சிவனார் வளர்தில் லையில்வே லவனே. 1

86. நார்மே வியநா வலர்நா தனெனும்
பேர்மே வியபெற் றிமறந் தனையோ
கூர்மே வியவாள் புனைகொற் றவனே
சீர்மே வியதில் லையில்வே லவனே. 2

87. கொல்வன் றொழில்கொண் டவர்பாழ் மனைமுற்
புல்வம் புபொருந் திடலென் றொழிவேன்
நல்வந் தனைநால் வர்புரிந் ததனால்
செல்வம் பொலிதில் லையில்வே லவனே. 3

88. மாரப் பயல்மா மலர்தொட் டதனால்
சோரப் படுதுன் பமொழித் தருள்வாய்
பாரப் புணரிக் கெதிர்பாழ் வினைநோய்
தீரப் புரிதில் லையில்வே லவனே. 4

89. கிளியென் றுகிளத் தியுமென் மனதில்
களிவந் துகலந் திடல்கண் டிலனே
வெளியென் றுவிளங் கியமெய் மொழியால்
தெளிவொன் றியதில் லையில்வே லவனே. 5

90. உருமா றியுழன் றிடுமூழ் வினைபோய்க்
குருமா ரொடுகூ டிவிளங் குவனோ
பருமா மயிலே றியபண் ணவனே
திருமால் பணிதில் லையில்வே லவனே. 6

91. நற்றோ கையினா ரியர்தம் மொடுநீ
உற்றோர் மொழியோ துவதுண் டுகொலோ
கற்றோ ரொடுகா தலறத் தவசால்
செற்றோர் மிகுதில் லையில்வே லவனே 7

92. புகலித் தவனொத் தொளிர் புங்கவனால்
இகலற் றுலகென் றுமகிழ்ந் திடுமோ
அகளத் தவர்சே கரமா ழியெனத்
திகழ்பொற் புறுதில் லையில்வே லவனே. 8

93. வயமிஞ் சியசூர் குலமாய் வுறவென்று
உயர்குன் றுறமுன் புயமொஞ் சுவதோ
வயலும் புகழைந் தொழிலா ருமருள்
செயல்கொண் டொளிர்தில் லையில்வே லவனே. 9

94. பிரமன் திருமால் பிறைசூ டிமுதற்
பரவுங் குகனென் பதுபா வமதோ
விரதம் புரிவிற் பனவே தியர்தம்
திரகுன் றியதில் லையில்வே லவனே. 10

95. குருவென் றுயர்கோ புரமுற் றதுமற்
றொருதூண் மிசையொன் றலுமோ தறியேன்
பொருவன் புறுபுத் தர்புலைச் சமையச்
செருவென் றவிர்தில் லையில்வே லவனே. 11

96. நெருண்மிஞ் சியநெல் லைநகர்ப் புலவன்
திருவொன் றியதில் லையில்வே லவன்மேல்
ஒருநெஞ் சுடனோ தியதுற் றுணர் வார்
கருவின் றியகா ரணமெய் துவரே. 12

# 39. புலியூர்ப்பாண்டி நாயகன் பதிகம்

## கொச்சகக் கலிப்பா

97. உளமெலிந்துன் புகழ்பாடி உழல்கின்ற சிறியேன்முன்
இளநகையார் இருவருடன் எப்பொழுது வருவாயோ
சளம்முழுதும் தவிர்த்தாளும் தனிவேற்கைப் பெருமானே
வளமலிந்த புலியூரில் வருபாண்டி நாயகனே. 1

98. கயல்போன்ற விழியார்தம் களபமுலைச் சமர்வேண்டி
அயலாரும் பெரிதிகழ அலையாமல்ப் புரந்தருள்வாய்
மயலாகும் உழவரவர் மகளிரொடு விளையாடும்
வயல்சூழும் புலியூரில் வருபாண்டி நாயகனே.

99. கிளையினரும் உறவினரும் கிளியனைய மொழியாரும்
தளையெனவிட் டிரந்துண்டும் தமியனேன் தவிப்பேனோ
விளைவுறுநெற் குலைசாய்ந்து வெதுப்புவதால் வீதிதொறும்
வளையுலவும் புலியூரில் வருபாண்டி நாயகனே. 3

100. கதியோடு காமியமும் கருத்தறிந்து முடிப்பாய்என்று
அதிஆசைப் படும்நாயேன் அலமரச்செய் தவன்ஆரோ
கதிர்ஊர்ந்து மதிஊர்ந்து கார்ஊரும் கவினுடைய
மதிளாரும் புலியூரில் வருபாண்டி நாயகனே. 4

101. எந்திரம்போல்த் தினம்சுழலும் எனதுமனம் அசையாமல்
இந்திரருக் கருளும்உன திருசரணிற் பதியாதோ
தந்திரத்தோர் எவராலும் தவிர்க்கரிய சதுர்வேத
மந்திரம்சேர் புலியூரில் வருபாண்டி நாயகனே. 5

102. மீனுறழும் கருங்கண்ணார் வித்தைஎல்லாம் மெய்என்னும்
நானும்உன தடியார்தம் நடுஇருக்கப் பெறுவேனோ
தேனுலவு கடப்பமலர்ச் செவ்வேளே திருக்கரத்தின்
மானுடையான் புலியூரில் வருபாண்டி நாயகனே. 6

103. வீசுதிரைக் கடலிடத்தில் விடுத்ததமிழ்ப் பெறினன்றிப்
பேசும்ஒரு கதிவரினும் பெற்றமைதற் கிசைவேனோ
தேசுமிக உடையானே சிறுகுறத்தி மணவாளா
மாசுணம்தாழ் புலியூரில் வருபாண்டி நாயகனே. 7

104. திண்மைமிகு சமண்அழியச் செகுத்தோனைப் புகழாமல்
தண்மையுறு கவிஞரையும் தமர்எனயான் தழுவுவனோ
வெண்மைபடு திருநீறும் மிகப்புனைந்த பெரியோரால்
வண்மைதிகழ் புலியூரில் வருபாண்டி நாயகனே. 8

105.நஞ்சனைய கொடும்சூரன் நகரோடு நசிவாக
மிஞ்சமரம் புரிந்தாயை மிகத்துதித்தும் வெருள்வேனோ
சஞ்சலம்தீர்த் தருள்கொடுக்கும் சரவணச்சண் முகவேளே
வஞ்சரிலாப் புலியூரில் வருபாண்டி நாயகனே. 9

106.ஏடலரும் மலரோனும் எழில்வளைக்கை உடையானும்
ஆடகமால் வரையானும் அயிற்படையைப் புகழாரோ
நீடருட்கண் பெருமானே நெருங்கிழையார் நடமாடும்
மாடமிகு புலியூரில் வருபாண்டி நாயகனே. 10

107.தேசிகராம் அவர்எல்லாம் திருக்கைவேற் குமரன்எனப்
பேசியும்என் கவலைஎனும் பிணிநீங்கப் பெற்றிலனே
பாசியணி குறப்பேதை பங்களாம் பழையோனே
மாசில்புகழ்ப் புலியூரில் வருபாண்டி நாயகனே. 11

108.செம்புநதிப் புனல்பாயும் திருநெல்லைப் பதியுடையான்
வம்புலவு மலர்ச்சோலை வளமாரும் புலியூரார்
நம்புநலம் தருபாண்டி நாயகன்மேல் நவில்பாடல்
வெம்புதுயர்க் கடல்ஒழித்து மெஞ்ஞானம் விளைப்பனவே. 12

# 40. செந்தில் முருகன் பதிகம்

## அறுசீர் வண்ணப் பதிகம்

தந்த தனதன தனதானா

109. தங்க நிலமிசை தினம்வாழ்வோர்
தங்கள் உறவையும் மதியாராம்
எங்கள் உளம்மெலி வடையாதே
என்று திருவருள் புரிவாயோ
சங்க மதில்வரு புலவோனே
தண்டம் அணிகரம் உடையானே
செங்கண் முரகரி மருகோனே
செந்தில் நகர்வளர் முருகோனே. 1

110. தந்தை அனைதுணை தமர்மானார்
தம்பொய் உறவினில் மருளாதே
விந்தை மிகுதுற வடை வோர்பால்
வெம்பு கலிஇருள் உறலாமோ
நந்தை அணிகுழை யினர்பாலா
நம்பும் அடியரை இகழாதார்
சிந்தை யிடைநடம் இடுபாதா
செந்தில் நகர்வளர் முருகோனே. 2

111. பொங்கம் உறுதமிழ் மலைமேல்வாழ்
புங்க வனைநிகர் பெரியோர்தாம்
வெங்கண் அரவுறழ் கொடியோரால்
வெம்பும் உலகினை அறியாரோ
தங்க வரையினர் வரபாலா
சந்தம் மொழிபவர் உறவோனே
திங்கள் நிகர்திரு முகவேளே
செந்தில் நகர்வளர் முருகோனே. 3

112. துங்க மதகரி நிகராநீர்
துன்று தவசிகள் உறவாலே
பங்கம் முழுவதும் ஒழியாதே
பன்றி எனநிதம் அலைவேனோ
பொங்கர் மிகுபல மலையானே
புந்தி அருள்சிவ குருநாதா
சிங்க முகன்உயிர் கவர்வோனே
செந்தில் நகர்வளர் முருகோனே. 4

113. கண்ட தெனமொழி பகர்மானார்

கண்கள் தருமயல் வலையாலே

சண்டன் உலகிடை புகுதீயோர்

தஞ்சம் எனும்நினை வொழியேனோ

கொண்டல் நிகர்குற மகள்பாகா

குஞ்ச ரியைமணம் அருள் வோனே

தெண்ட னிடுமவர் எளியோனே

செந்தில் நகர்வளர் முருகோனே. 5

114. வெம்பு மிடிகெட அருளாலே

வென்றுன் அடியவர் மொழிபோலே

நம்பும் நலமது பெறுவேனோ

நைந்து பிணம்என மடிவேனோ

சம்பு வழிபடு குருநாதா

சண்டை யிடுமவர் குலகாலா

தெம்பு முழுவதும் உடையானே

செந்தில் நகர்வளர் முருகோனே. 6

115. பொன்ற லறுபுகழ் உடையாரே
புங்க மிகுதவர் எனநாயேன்
மன்ற மதனிலும் மொழிநீர்தான்
வம்பில் ஒழிவது முறையாமோ
குன்றம் முழுமையும் உடையானே
கொஞ்ச மதியினர் உணரானே
தென்றல் வரைமுனி பணிதேவே
செந்தில் நகர்வளர் முருகோனே. 7

116. தண்கொள் மலர்மிகு பொழில்சூழ்ஓர்
சண்பை நகர்வரு முனியேபோல்
வண்கொள் ஒருதவன் வரலாலே
வஞ்சர் குலம்முழு தொழியாதோ
விண்கொள் இமையவர் பெருமானே
வென்றி திகழ்அயில் புனைவோனே
திண்கொள் பலபுயம் உடையானே
செந்தில் நகர்வளர் முருகோனே. 8

117. கந்து தவிர்கரி பொருசூர்மா
கங்குல் எனும்உடல் பிளவாவான்
வெந்து விடும்அயில் உடையோனே
விஞ்சை முதல்என மொழியேனோ
கொந்து மருவிய மலர்நீபா
குன்று தொறும்நட மிடுபாதா
சிந்து பரவிய கொலுவோனே
செந்தில் நகர்வளர் முருகோனே. 9

118. அம்பு வியைஅருள் அயன்மாயோன்
ஐந்து முகன்முத லியவானோர்
நம்பு திருவருள் உடையாய்நான்
நந்து முனம் அருள்புரிவாயே
கொம்பு திருகிய தகரோனே
கொன்று நுகர்பவர்
சிம்புள் நிகர்குரு கணிதோளா
செந்தில் நகர்வளர் முருகோனே. 10

119. அண்டும் அடியவர் நினைவேபோல்

அங்கு வரும்உனை அறியாதே

உண்டு குருஎன உழலேன்நான்

உன்றன் அடியவ ரொடுசேராய்

பண்டு கிளிபுகழ் திணிதோளா

பஞ்ச நிறமயில் இவர்வோனே

சென்டு வளைபயில் பெறும்வீரா

செந்தில் நகர்வளர் முருகோனே. 11

120. சிந்த வினைகளை அடுநீர்சேர்

செம்பு நதியதன் வடமேல்ஆம்

அந்த மிகும்கழை வனம்மேவோர்

அன்பன் அலைகடல் அருகேநீள்

சந்த வரைவளர் குகன்மீதே

சந்தம் எனமொழி தமிழ்தேர்வோர்

எந்த விதமும்மெய் அடியாராய்

இங்கு மகிழ்வது நிசமாமே. 12

***

## பின்னிணைப்பு: 1

### செய்யுள் முதற்குறிப்பகராதி

செய்யுள் தொடர் எண்

## பதிகங்களின் அகரநிரல்

## பின்னிணைப்பு: 2

## அருஞ்சொற்பொருள்

| | | |
|---|---|---|
| அசம் | - | ஆடு (1) |
| அட்டதிக்கு | - | எண்திசை (67) |
| அட்டமாசித்தி | - | என்வகைச் சித்திகள் அணிமா, மகிமா, கரிமா, இலகிமா, பிரார்த்தி,பிராகாமியம், ஈசத்துவம், வசித்துவம்.(43) |
| அடல் | - | வெற்றி (23) |
| அடியவர் | - | தொண்டர் (6) |
| அண்டர் | - | தேவர் (21) |
| அந்தகன் | - | யமன் (37) |
| அமர் | - | போர்க்களம் (57) |
| அமல | - | மாசற்ற (6) |
| அயர் | - | வாட்டம் (52) |
| அயில் | - | வேல் (106) |
| அரவணை | - | பாம்புப்படுக்கை (71) |
| அரி | - | சிங்கம் (40) |
| அருவம் | - | உருவம் இல்லாதது (6) |
| அருவுருவம் | - | உருவம் இல்லாததாபதம்; உருவம் உள்ளதையும் சொல்ல முடியாதது (6) |
| அவுணன் | - | அசுரன் (45) |
| அளி | - | வண்டு (26) |
| அளை | - | வெண்ணெய் (30) |
| அற்றார் | - | பொருள் இல்லாதவர் (13) |

| | | |
|---|---|---|
| அன்பர் | - | பக்தர் (66) |
| ஆகமம் | - | வேத சாத்திரங்கள் (15) |
| ஆகமம் | - | வேதசாத்திரங்கள் (49) |
| ஆதிபன் | - | இறைவன் (59) |
| ஆவல் | - | ஆசை (22) |
| ஆழி | - | சக்கரம் (58) |
| ஆனா | - | கெடாத (13) |
| இகல் | - | பகை (36) |
| இடைதல் | - | சோர்தல் (22) |
| இயம்புதல் | - | சொல்லுதல் (30) |
| இரத்தல் | - | வேண்டுதல் (52) |
| இளையவன் | - | முருகன் (30) |
| இறைஞ்சுதல் | - | வணங்குதல் (54) |
| ஈறு | - | முடிவு (19) |
| உய்தல் | - | உயிர்வாழ்தல் (49) |
| உருகுதல் | - | மனம் நெகிழ்தல் (20) |
| உருவம் | - | வடிவம் உள்ளது (6) |
| உலவுதல் | - | இயங்குதல் (52) |
| உழலுதல் | - | நிலைகெடுதல் (26) |
| உறை | - | இருப்பிடம் (66) |
| ஊடுதல் | - | பிணங்குதல் (25) |
| ஏகுதல் | - | செல்லுதல் (7) |
| ஏதம் | - | கேடு (77) |
| ஏவர் | - | எல்லோரும் (22) |
| ஏழிசை | - | குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் என்னும் ஏழ நரம்புகள் (56) |

| | | |
|---|---|---|
| ஏனல் | - | தினைப்புனம் (68) |
| கதி | - | புகலிடம் (41) |
| கமலநான்முகத்தோன் | - | பிரமன் (46) |
| கயவர் | - | கொடியவர் (38) |
| கயவர் | - | கொடியவர் (52) |
| கரம் | - | கை (30) |
| கரவு | - | வஞ்சனை (83) |
| கரியவன் | - | திருமால் (30) |
| கலபம் | - | மயில்தோகை (31) |
| கவி | - | பாட்டு (53) |
| கவின் | - | அழகு (100) |
| கழை | - | மூங்கில் (120) |
| களிசார்தல் | - | அகங்களித்தல் (4) |
| களிறு | - | யானை (68) |
| காயம் | - | உடல் (4) |
| கார்குழல் | - | கருமையான (16) |
| காரணன் | - | கடவுள் (37) |
| கிரி | - | மலை (66) |
| கிளத்தல் | - | விதந்து கூறுதல் (35) |
| கிளை | - | சுற்றம் (30) |
| கீர்த்தி | - | புகழ் (31) |
| கீள் | - | இடுப்பில் கட்டும் துணியாலாகிய அரைஞான் (51) |
| குஞ்சரம் | - | யானை (57) |
| குஞ்சரி | - | தெய்வயானை (62) |
| குருபரன் | - | பரமகுரு (47) |

| | | |
|---|---|---|
| குலாவுதல் | - | மகிழ்தல் (67) |
| குளம் | - | நெற்றி (27) |
| கேகயம் | - | மயில் (53) |
| கேதனம் | - | கொடி (9) |
| கேளி | - | மகிழ்ச்சி (34) |
| கொங்கை | - | பெண்ணின் மார்பகம் (5) |
| கொதித்தல் | - | வருத்தமுறுதல் (32) |
| கொவ்வை | - | கோவைப்பழம் (59) |
| கோ | - | அரசன் (8) |
| கோமளம் | - | மென்மை (76) |
| கோவணம் | - | கீழாடை (51) |
| கௌவை | - | துன்பம் (59) |
| சண்பை | - | சீர்காழிநகர் (32) |
| சதுர் | - | நான்கு (101) |
| சந்தம் | - | அழகு (35) |
| சபை | - | அவை (43) |
| சமரச வாழ்வு | - | நடுநிலை வாழ்வு (47) |
| சமரம் | - | போர் (105) |
| சளம் | - | துன்பம் (97) |
| சாமீபம் | - | கடவுளை அணுகியருக்கும் நிலை (60) |
| சாற்றல் | - | சொல்லுதல் (60) |
| சாற்றுதல் | - | சொல்லுதல் (35) |
| சிகரி | - | கோபுரம் (36) |
| சிகி | - | மயில் (29) |
| சிட்டர் | - | சான்றோர் (48) |

| | | |
|---|---|---|
| சிதடர் | - | அறிவற்றவர் (28) |
| சிந்தை | - | மனம் (22) |
| சினம் | - | கோபம் (25) |
| சுத்தம் | - | தூய்மை (24) |
| சுரம் | - | காய்ச்சல் (52) |
| சுரர் | - | தேவர் (2) |
| செகுத்தல் | - | அழித்தல் (104) |
| செங்கை | - | சிவந்தகை (5) |
| செந்தகர் | - | செம்மறி ஆடு (69) |
| செப்பல் | - | சொல்லுகை (5) |
| செப்பு | - | செப்புதல் (12) |
| செருக்கு | - | அகந்தை (10) |
| செவ்வை | - | நேர்மை (59) |
| செற்றம் | - | மனவயிரம் (51) |
| செற்றோர் | - | அழித்தவர் (91) |
| சென்னி | - | தலை (75) |
| சோகம் | - | சோர்வு (15) |
| சோம்பு | - | சோம்பல் படுகின்ற (49) |
| தஞ்சம் | - | அடைக்கலப்பொருள் (64) |
| தத்து | - | ஆபத்து (60) |
| தத்து | - | மனக்கவலை (60) |
| தமியன் | - | திக்கற்றவன் (29) |
| தழல் | - | நெருப்பு (29) |
| தாயகம் | - | அடைக்கலம் (66) |
| திக்கு | - | திசை (23) |

| | | |
|---|---|---|
| துட்டர் | - | தீயோர் (43) |
| தெருள் | - | அறிவின் தெளிவு (7) |
| தேசிகன் | - | குரு (46) |
| தேசு | - | அறிவு (103) |
| தேவு | - | தெய்வம் (49) |
| தேறு | - | தெளிவு (42) |
| தொழும்பர் | - | அடியவர் (50) |
| தோய்தல் | - | நனைதல் (67) |
| நட்டம் | - | நடனம் (67) |
| நம்பன் | - | கடவுள் (67) |
| நல்குதல் | - | கொடுத்தல் (17) |
| நாதன் | - | சிவன் (33) |
| நாவலர் | - | புராணம் (17) |
| நிசம் | - | உண்மை (1) |
| நித்தம் | - | என்றும் (19) |
| நிதம் | - | தினமும் (18) |
| நிமல | - | மாசில்லாத (3) |
| நீறு | - | தீருநீறு (8) |
| நெடும்புயம் | - | தோள் (56) |
| நெருள் | - | மக்கட்கூட்டம் (9) |
| நைதல் | - | இரங்குதல் (61) |
| நொந்து | - | துன்பம் (26) |
| பகர்தல் | - | சொல்லுதல் (6) |
| பங்கன் | - | பாகமுடையவன் (59) |
| படை | - | சேனை (45) |
| படைத்திடும் தொழிலோன் | - | பிரமன் (32) |

| | | |
|---|---|---|
| பத்தர் | - | அடியவர், கடவுள் அன்புடையவர் (24) |
| பதைபதைத்தல் | - | துடிதுடித்தல் (44) |
| பாகன் | - | பக்கத்தில் கொண்டவன் (34) |
| பாங்கர் | - | தோழர் (3) |
| பாண்டிநாவலன் | - | பாண்டிய நாட்டு புலவன் (36) |
| பாழி | - | அகலம் (56) |
| பிரஞானம் | - | இறைவனை உணரும் பத்திநிலை வகை (67) |
| பிறங்குதல் | - | விலங்குதல் (28) |
| புங்கவன் | - | தூயவன் (80) |
| புடவி | - | நிலவுலகம் (55) |
| புடவி | - | பூமி (55) |
| புத்தி | - | அறிவு, மனம் (23) |
| புனைதல் | - | அணிதல் (19) |
| பூசை | - | ஆராதனை (25) |
| பூவகம் | - | நிலஉலகம் (10) |
| பேணுதல் | - | பாதுகாத்தல் (65) |
| பேதலித்தல் | - | மனம் குழம்புதல் (19) |
| பொங்கர் | - | சோலை (112) |
| பொருப்பு | - | பக்கம் (47) |
| பொல்லாதேன் | - | தீயவன் (50) |
| போகம் | - | இன்பம் (18) |
| போதம் | - | ஞானம் (13) (77) |
| போது | - | மலரும் பருவத்து அரும்பு (58) |
| மட்டு | - | தேன் (43) |

| | | |
|---|---|---|
| மடிதல் | - | அழிதல் (68) |
| மணவாளன் | - | கணவன் (6) |
| மயம் | - | செருக்கு (40) |
| மயல் | - | மயக்கம் (49) |
| மயல் | - | மையல், ஆசை (5) |
| மரய்தல் | - | மறைதல் (40) |
| மருவுதல் | - | கலந்திருத்தல் (32) |
| மருள் | - | மயக்கம் (80) |
| மலரோன் | - | தாமரையில் இருப்பவனான பிரமன் |
| மழவு | - | இளமை (29) |
| மன்றில் | - | வாயில் முற்றம் (55) |
| மன்று | - | சபை (55) |
| மாதவர் | - | முனிவர் (51) |
| மாது | - | பெண் (4) |
| மாமுனி | - | பெருந்துறவி (64) |
| மாயவன் | - | திருமாள் (34) |
| மாரணம் ஒருவன் | - | எண்வகை மாயவித்தையுள்ள மந்திரத்தால் மறக்கச் செய்யும் வித்தை (9) |
| மாரவேள் | - | காமன் (45) |
| மானார் | - | பகைவர் (13) |
| மிடி | - | துன்பம் (29) |
| முக்கண்ணன் | - | சிவன் (82) |
| முகில் | - | மேகம் (61) |
| முண்டகன் | - | பிரமன் (82) |
| மும்மலர் | - | ஆணவம், கன்மம், மாயை (11) |

| | | |
|---|---|---|
| முரகரி | - | திருமால் (82) |
| முரலுதல் | - | ஒலித்தல் (27) |
| முழங்குதல் | - | பெரிதொலித்தல் (53) |
| மூதூர் | - | பழைய ஊர் (49) |
| மெய்யுணர்வு | - | தத்துவஞானம் (17) |
| மெழுகு | - | அரக்கு (37) |
| மென்மொழி | - | இனியசொல் (33) |
| மேதினி | - | உலகம் (63) |
| மேயான் | - | உறைபவன் (48) |
| மேவல் | - | சேர்தல் (16) |
| மேவுதல் | - | அடைதல் (16) |
| மேனி | - | உடல் (39) |
| மேனை | - | மலையரசன் மனைவி (29) |
| வஞ்சர் | - | வஞ்சகமுள்ளவர் (57) |
| வதனம் | - | முகம் (1) |
| வரதன் | - | கடவுள் (57) |
| வனம் | - | காடு (31) |
| வாஞ்சை | - | விருப்பம் (4) |
| வாதித்தல் | - | வாதாடுதல் (49) |
| வார்த்திகமுனிவன் | - | தூதன் (31) |
| வாரணம் | - | கோழி (66) |
| வாழி | - | வாழ்க என்னும் பொருளில் வரும் வியங்கோள்சொல் (68) |
| விடை | - | எருது (29) |
| விதம் | - | வகை (25) |
| விரதர் | - | துறவி (50) |
| வெருள் | - | அச்சம் (40) |

## பின்னிணைப்பு: 3

## சுவடியமைப்பு

| | | |
|---|---|---|
| நூல் | : | பதிக வருடம் |
| ஆசிரியர் | : | தண்டபாணி சுவாமிகள் |
| சுவடி எண் | : | கோவைக் கௌமார மடாலயச் சுவடி - 26 |
| சுவடியின் தன்மை | : | ஓலைச்சுவடி; (நல்ல நிலையில் உள்ளது) |

| | | |
|---|---|---|
| நீளம் | : | 34.5 செ. மீ |
| அகலம் | : | 3.5 செ.மீ. |
| சுவடியில் வரிகள் | : | ஒரு பக்கத்திற்கு 14, 15 வரிகள், இருபக்கமும் எழுதப்பட்டு உள்ளது. |
| ஏடுகளின் எண்ணிக்கை | : | 46 |
| மொத்தப்பக்கங்கள் | : | 92 |

## துணைநூல்கள்

1. நாகராஜன். ப.வெ., (ப.ஆ.)
திருவாமாத்தூர்ப் பதிகச் சதகம்
முதற்பதிப்பு - 1998
சிரவைக் கௌமார சபை வெளியீடு கோவை.

2. பரசிவம். த.கோ., (ப.ஆ.)
சுவடிப் பதிப்பு நெறிமுறைகள்
முதற்பதிப்பு - 1989
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர்.

3. முருகதாச ஐயா. தி.செ.,
தண்டபாணி சுவாமிகள் வரலாறு
முதற்பதிப்பு - 1964
கௌமார சபை வெளியீடு
திருவாமாத்தூர்.

4. மணிகண்டன். ய.,
தமிழில் யாப்பிலக்கண வளர்ச்சி
விழிகள் பதிப்பகம், முதற் பதிப்பு - 2001
சென்னை.

5. குமார சுவாமிப் புலவர். அ.,
யாப்பருங்கலக் காரிகை புத்துரை
தேன் புத்தக நிலையம்
முதற்பதிப்பு - 2004
சென்னை.

